# ஸ்ரீ ராமாநுஜன் 209







சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபாமூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.
ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 18 | 5—3—66ல் வெளியிடப்பட்டது. of May, 1966. பராபவஸ்ரீ வைகாசிமீ | ஸஞ்சிகை 5

## திருவாய்மொழி நூற்றந்தாதி—88

**அறுக்குமிட ரென்றவன்பால் ஆங்குவிட்ட தூதர்***
**மறித்துவரப் பற்று மனத்தால்—அறப்பதறிச்**
**செய்யதிரு நாவாயில் செல்லநினைந் தான்மாறன்***
**மையலினால் செய்வறியா மல்.**

| | |
|---|---|
| இடர் அறுக்கும் என்று | நமது துயரங்களைப் போக்கியருள்வனென்று கொண்டு |
| அவன் பால் ஆங்கு விட்ட தூதர் | அப்பெருமானைக் குறித்து அனுப்பப்பட்ட தூதர் |
| மறித்து வர பற்று மனத்தால் | மீண்டுவருமளவும் ஆறியிருக்க மாட்டாத திருவுள்ளத்தாலே |
| அற பதறி | மிகவும் விரைந்து |
| மையலினால் செய்வு அறியாமல் | அறிவு கலக்கத்தினால் செய்யவேண்டியது இன்னதென்று தெளியாமல் |
| மாறன் | ஆழ்வார் |
| செய்ய திரு நாவாயில் | விலக்ஷணமான திருநாவாய்ப் பதியை நோக்கி |
| செல்ல நினைந்தான் | எழுந்தருள முயன்றார். |

* * * கீழ்ப்பதிகமான *எங்கானலகங்கழிவாயில் தூதுவிட்டாராழ்வார். அப்படி விடப்பட்ட தூதர் அத்தலைப்பட்டு எம்பெருமானுக்குத் தம்முடைய நிலைமையை யறிவித்து மீண்டுவருவதற்குமுன்னே ஆழ்வார் மிகவும் பதறித் திருநாவாயென்னும் மலைநாட்டுத் திருப்பதியிலே செல்ல நினைத்தபடியைக் கூறுவதாம். *அறுக்கும் வினையாயினவென்னும் பதிகம். செல்லவேணுமென்கிற மனோரதம் மட்டுமேயொழிய எங்ஙனம் செல்லவல்லராழ்வார். *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்னவேண்டும்

நிலைமையன்றோ ஆழ்வாருடையது. எங்ஙனே புறப்படுவர் இவர்தாம். இருந்தவிடத்திலே யிருந்து மனோரதிக்குமத்தனையேயுள்ளது. திருவடி இலங்கையிற்சென்று பிராட்டியைத் தொழுது மீண்டபிறகு பெருமாளைக் கிட்டுமளவும் பிராட்டிக்குப்பிறந்த மனோரதம் போலேயாயிற்று ஆழ்வாருடைய மனோரதமும். கீழ்ப்பதிகத்திலே திருமூழிக்களத்தில் தூதுவிட்ட ஆழ்வார் அத்தலத்திற்குச் செல்லவிரும்பாமல் வேறொரு தலத்திற்குச் செல்லவிரும்புவது கூடுமோ? என்று யார் யாரைக் கேட்பது? "கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை நூல்வரம்பில்லையே" என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையை நினைத்து ஆறியிருப்பது. இப்பாட்டினீற்றடியை 'மையலினால் செய்வதறியாமல்', என்று சிலர் ஓதுவது தகுதியற்றது; அது வெண்பாவிலக்கணத்திற்குச் சேராது. "**செய்வறியாமல்**" என்பதே பாடம். செய்வு என்றாலும் செய்வதென்றே பொருள்படும். "வியாக்கியைகள் **செய்வால்**" என்ற உபதேசரத்தினமாலைப் பிரயோகமுங்காண்க. ... 

## ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

| | MADRAS MEMBERS: | Madras No. |
|---|---|---|
| 31. | Sri G. Srinivasachariar, Caltex. | 24 |
| 32. | ,, V. மாசிலாமணி | 21 |
| 33. | ,, A. Srinivasachari | 15 |
| 34. | ,, விஜயவல்லியம்மாள் | 1 |
| 35. | ,, M. R. Seshadri Iyengar | 1 |
| 36. | ,, A. Thirumalai Iyengar, Chrompet. | |
| 37. | ,, S. Narayana Iyengar, Pallavaram. | |
| 38. | ,, Raosahib. S. Raghavayyangar | 24 |
| 39. | ,, G. R. Srinivasan | 17 |
| 40. | ,, P. G. மாணிக்கராமாநுஜதாஸர் | 1 |
| 41. | ,, N. T. ரகுராமகிருஷ்ணன் | 2 |
| 42. | ,, C. Krishnaswami | 34 |

(வெளியூர் மெம்பர்ஸ்)

43. குணசீலம், ராமநாதஞ்செட்டியார்
44. உவே. ராஜமையங்கார், மன்னார்குடி
45. அய்யாஸாமிப்பிள்ளை, நடராஜப்பிள்ளை சாவடி
46. உவே. V. Srinivasan, Bombay 22
47. R. நாராயணையங்கார், சிரகிக்கோட்டை
48. கோயில் உத்தமநம்பி சடகோபாசாரியர் ஸ்வாமி
49. ஸ்ரீ திருநாராயண ராமாநுஜதாஸர்
50. மதுரை, குப்புஸாமி கண்ணதாஸி
51. உவே. திருவிந்தளூர் ராமாநுஜாசாரியர்ஸ்வாமி
52. மல்லேச்வரம், திருவேங்கடத்தய்யங்கார்
53. திருநெல்வேலி பேரருளாளன்
54. பந்தல்குடி, வெங்கடசாமி நாய்க்கர்
55. சேலம், P. S. V. ராமாநுஜம்
56. சீர்காழி, எதிராஜராமாநுஜதாசர்
57. (K. G F.) S. R. நாராயணன்
58 ஆழ்வார்திருநகரி R. வெங்கடாசாரி, B.A ,B.L.
59. ஈரோடு, K. P. சந்திரகாசன்
60. கோவில்பட்டி, திருநாவுக்கரசனார்
61. கோவை, Dr. ஸுந்தரராஜன், M.B.B.S.
62. Chikballapur K. Krishnamacharyar
63. Jatwar Ramyavaracharyar
64 Musarwakkam விரக்தி ஸ்ரீநிவாஸாசார்யர்
65. தென்னூர் R L. நாராயணய்யங்கார் S. M.
66. Nittoor Srinivasayyangar
67. சன்னு நல்லூர் ஆண்டாளம்மா
68 Nellore கூரம் துரைசாமி ஐயங்கார்
69 நடயனேரி கிருஷ்ணராமாநுஜம்
70. பரமகுடி J, கேசவராமன்
71. உடுமலைப்பேட்டை நவநீதகிருஷ்ணசபை
72. K ஸ்ரீரங்காசாரியர், ஸ்ரீரங்கம்

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

**ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

# விசுவாவஸு௵ மீன விசாகோத்ஸவப் பத்திரிகை.

ஸ்ரீ ஸ்வாமியின் எழுபத்தைந்தாவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு

**ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்**

நாளது பங்குனிமீ 17௳ 30-3-66 புதன்கிழமை புநர்வஸு முதல்
பங்குனிமீ 26௳ 8-4-66 வெள்ளிக்கிழமை திருவிசாகம் வரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தானம், ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும் ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே ஸாமவேதம், சுக்ல யஜுஸ், யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதிவலத்துடன் நடைபெறும்.

காஞ்சீபுரம்,
5-3-66.

இங்ஙனம்:
பிரதிவாதிபயங்கரம் **செல்வமணி** என்கிற
**ரங்கநாத தாஸன்.**

---

**SRI KANCHI MAHA VIDWAN JAGADACHARYA SIMHASANADHIPATHI**

# P. B. ANNANGARACHARYA SWAMI'S

## SEVENTY SIXTH BIRTH DAY CELEBRATIONS

The Seventy-Sixth Birth day of Sri Swami is being celebrated this year at his residence in Kanchi from 30—3—'66 to 8—4—66 Friday Vedas, Divya Prabandhams, Stotras and Rahasyas will be chanted. Procession of the Veda Goshti and religious lectures will also take place as usual.

You are cordially invited to attend.

Kancheepuram,
5—3—66.

CHELLAMANI alias
**P. B. RANGANATHACHARYA.**

## சென்ற வருஷத்து ஸம்பாவனே, ஸமர்ப்பணே வரவுகள்.

| | ரூ. |
|---|---|
| ஸ்ரீமத் பரமஹம்ஸ. திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி ஸன்னிதி ... | 25 |
| ,, பதரீ ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமிகள் ... | 200 |
| ,, Mangadu Thiruvenkata-chari ... | 40 |
| ஸ்ரீஉவே. மன்னார்குடி மிராசுதாரர் A. ஸ்ரீநிவாஸய்யங்கார் ... | 25 |
| ,, A. K. சடகோபாசாரியர், அம்பத்தூர் ... | 20 |
| ,, G. V. லக்ஷ்மீநாராயணன், சென்னே ... | 10 |
| ,, V. Rajagopalachari, M.L., Kilpauk, Madras ... | 15 |
| ,, M.O. Alasingarachari, B.A.,B.L. Editor, Bhakthan ... | 10 |
| ,, C. S. P. Raghavan, Madras ... | 15 |
| ,, Chikballapur K. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ... | 10 |
| ,, P. V. S. Iyengar ... | 101 |
| ,, His son R. Srinivasan, Kanpur ... | 50 |
| ,, P. N. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், புது டில்லி ... | 15 |
| ,, V. Srinivasan, Sardarnagar, Bombay ... | 5 |
| ,, T. R. Raghavayyangar, Trust பாத்திரக்கடை, காரைக்குடி ... | 10 |
| ,, S. Sundararaja Iyengar, Advocate, மதுரை ... | 30 |
| ,, T.N. மகரபூஷணமையங்கார் தென் திருப்பேரை .. | 10 |
| ,, A. S. ராமாநுஜம், திருப்பத்தூர் | 10 |
| ,, S. ஸத்யமூர்த்தி ஸ்வாமி, Gwalior ... | 16 |
| ,, A. ஸ்ரீநிவாஸய்யங்கார், சென்னே | 21 |
| ,, கோனேரிகுப்பம், ஸ்ரீமணி மரதகவல்லியம்மா ... | 25 |
| ,, ஆரணி, பத்மநாப பாகவதர் ... | 5 |

| | ரூ. |
|---|---|
| ஸ்ரீமான் மெக்கானிக் துரைஸாமி, பாகவதர், சென்னே. ... | 100 |
| ஸ்ரீ உவே. V.V. ஐயங்கார் ஸ்வாமி, கரியமாணிக்கம். ... | 10 |
| ,, A. V. நரஸிம்ஹாசாரியர், Auditor, Chittoor. ... | 25 |
| Sri A. R. Venkatachari, Amrutur | 10 |
| Sri K. Kancheepurna Chetty, சேலம் செவ்வாபேட்டை ... | 5 |
| ஸ்ரீ நெய்வேலி பட்டர்பிரான் ... | 10 |
| ஸ்ரீமான் டாக்டர் V. சேஷராமாநு ஐய்யா, மதுரை. ... | 40 |
| ஸ்ரீஉவே. ரிக்வேதி B. வரதாசாரியர் கொடிகோவில், கோவை. .. | 10 |
| Sri A. V. கன்னேய நாயுடு மதராஸ். | 25 |
| ஸ்ரீமான் M. ஏகாம்பர முதலியார், சென்னே. திருவிசாகத்தன்று ததியாராதனே உபயம். | |
| ,, அண்ணுமலை நாடார், சென்னே. | 25 |
| ,, நாராயணக்கோனர். ... | 101 |
| ,, V. N. தேவநாதன். ... | 20 |
| ,, ஆத்தூர். ஸ்ரீதரன் கேசவுலு நாயுடு ... | 120 |
| ,, K. A. ஷண்முக முதலியார், திருப்பத்தூர். ... | 50 |
| ,, K. A. காளியப்ப முதலியார், திருப்பத்தூர். ... | 10 |
| ஸ்ரீமதி மங்கலம் பத்மம்மா, சென்னே. | 25 |
| ,, M. தனகோடியம்மா ,, ... | 10 |
| ,, கிருஷ்ணகிரி வெங்கடலக்ஷ்மி | 10 |
| Madras Vemoor Ranganadha Chetty's Charities ... | 50 |
| Sri Gopi Krishna Ladha, Calcutta | 5 |
| Madras, Bombay, Ahmedabad, Fiparia and Andhra Pradesh Bhakthas | 496 |

இப்படிக்கு,

**C. SUBRAYALU CHETTY,**
Secretary, Birthday Celebration Committee,
**3, Thambu Naicken Street, Madras. G.T.**

# கீதாபாஷ்ய காலக்ஷேபகோஷ்டி

இக்காலத்தில் எங்கும் உபந்யாஸ கோஷ்டிகள் மலிந்துவிட்டதனால் ப்ராசீன ரீதியான காலக்ஷேப கோஷ்டியைக் காண்பது எங்குமே அரிதாய்விட்டது. முற்காலத்தில் காலக்ஷேபமென்கிற சொல் வழங்கிவந்ததானது—ஸ்ரீ பாஷ்யம் பகவத் விஷயம் திருமந்த்ரார்த்தம் ஸ்ரீவசனபூஷணம் முதலான பூர்வாசார்ய க்ரந்தங்களை ஸரஸ்வதீபீடத்தில் வைத்து பங்க்திகளை ஸேவித்து அவற்றின்மேல் ஆசார்யர் அர்த்தவிவரணம் செய்தருள சிஷ்யர்கள் கேட்கிற முறைக்கேயாயிருந்தது. இந்த முறை ஒவ்வொரு திவ்யதேசத்திலும் மடங்களிலும் ஆசார்ய புருஷர்களின் திருமாளிகைகளிலும் வித்வான்களின் திருமாளிகைகளிலும் பெரும்பாலும் இடையறாது நடந்து வந்தது. இக்காலத்திலும் இந்த முறை ஆங்காங்கு விரளமாகக் காணப்படுவதுண்டு. ஏறக்குறைய நாற்பதைம்பது வருஷமாக உபந்யாஸங்களுக்கே ப்ராபல்யமேற்பட்டுவிட்டதனால் முன்னம் நாம் விவரித்த ப்ரக்ரியை அனேகமாக லோபமடைந்துவிட்டதென்றே சொல்லும்படியாயிற்று. உபந்யாஸங்கள் கேட்பதில் குணமுண்டு என்றாலும் பூர்வாசார்ய ஸ்ரீகோசங்களின் அர்த்தங்களைப் பங்க்திமேல் கேட்டுத் தெரிந்துகொள்ளாவிடில், உபந்யாஸங்களில் கேட்கும் விஷயங்கள் ஹ்ருதயத்தில் தேங்கிநிற்பது அரிதேயாகும். ஸம்ஸ்க்ருத பாஷையில் ஆழ்ந்த வ்யுத்பத்தியை சிரமப்பட்டு ஸம்பாதிப்பவர்கள் **'க்வசித் க்வசித்'** என்னும்படியுள்ளார்கள். அன்னவர்களுக்கும் தேஹயாத்ரார்த்த ப்ரவ்ருத்தி நிர்ப்பந்தங்களினால் ப்ராசீனரீதியான க்ரந்த காலக்ஷேபத்திலே அதிகமான ஊக்கங்கொள்ள முடியாமற்போகிறது. ஆனாலும் லோகக்ஷேம ஜாகரூகனான ஸர்வேச்வரன் ப்ராசீன பத்ததிகளை அறவே அழித்திடாமல் ஆங்காங்கு விரளமாகவாவது நடத்திக்கொண்டு போரும்படியைக் கண்டு மகிழவேண்டியதாகிறது. ப்ரக்ருதம், இங்கே காட்சிதருகின்ற காலக்ஷேப கோஷ்டியைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். சென்ற திருவாடிப்பூர நன்னாளில், அடியேனுடைய ஜ்யேஷ்டஜாமாதா. ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்த வித்வான். தி. அ. அக்காரக்கனி. ஸம்பத்குமாராசார்ய



ஸ்வாமி நால்வருடைய ப்ரார்த்தனையினால் கீதாபாஷ்ய காலக்ஷேபம் தொடங்கினார். ப்ரார்த்தித்த நால்வராவார்—1. ஸ்ரீமான். காஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம். காதி. ஸ்ரீநிவாஸாசாரியர், ந்யாய சிரோமணி 2. ஸ்ரீவில்லிபுத்தூர். T. பார்த்தஸாரதி ஐயங்கார், ஸாஹித்ய சிரோமணி. 3. தி. ந. ச. வரதாசாரியர், ஸாஹித்ய சிரோமணி. 4. கோ. க. அண்ணன். துரைஸாமி ஐயங்கார். ஆக இவர்கள் நால்வரும் ஆறுமாதகாலம் அவிச்சின்னமாக கீதையின் பகவத் ராமாநுஜபாஷ்யத்தை முறை தவறாது ஸேவித்து 16—2—66 புதன்கிழமையன்று சாந்திசெய்தார்கள். அந்த கோஷ்டி முன்பக்கத்தில் காட்சிதருகின்றது.

நம்முடைய உபந்யாஸ சதத்வயத்தில் பதினேழாவது உபந்யாஸம் "நிரவத்யவித்யா ப்ரபாவோபந்யாஸம்" என்பது. (ஸ்ரீராமா. நெ. 199ல்) வெளிவந்துள்ளது. ப்ரக்ருத கீதாபாஷ்ய ப்ரவக்தாவைப்பற்றின அவ்வுபந்யாஸம் இங்கு ஸ்மரிப்பிக்கப்படுகின்றது.

---

## ஸ்ரீமதித்யாதி. உபயவே. கோ. கம். (உளுந்தை) ரங்காசாரியர்ஸ்வாமி. வைகுண்டவாஸி. காஞ்சீ.

ஸ்ரீகாஞ்சீபுரியின் பழைய பரிஸ்திதியையும் இப்போதைய பரிஸ்திதியையும் நினைக்கும் போது மிக்க பரிதாபமேயுண்டாகின்றது. பெரும்பாலும் வீதிதோறும் ஜ்ஞானசீல வயோவ்ருத்தர்கள் மலிந்திருந்தகாலம் இன்னமும் பலபேர்களுக்கு மறந்திராது. பவபூதி மஹாகவி உத்தரராம சரிதத்தில் ஸ்ரீராமபிரானுடைய வார்த்தையாக "**தே ஹி நோ திவஸா கதா:**" என்றொரு சுலோகமிட்டிருப்பதை அடிக்கடி நினைக்கிறேனடியேன். பழைய காலமென்பது மிகவும் புராதன காலமன்று. முப்பது நாற்பது வருஷங்களுக்கு முற்பட்ட காலமேயாம். அப்போது காஞ்சியின் பல வீதிகளில் ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரப்ரவசனங்கள் நடந்துகொண்டிருந்தன. பெரிய காஞ்சியிலும் வேதங்களில் வல்லவர்களும் தர்ம சாஸ்த்ர நிபுணர்களுமான பல ஸ்மார்த்த பண்டிதர்கள் வைதிகோத்தமர்கள் மலிந்திருந்தார்கள். ஸ்ரீராமபிரான் தண்டகாரண்யத்தை இருமுறை கடாக்ஷித்தார். முதல்முறை பித்ருவாக்ய பரிபாலனார்த்தமாக அரண்யத்திற்கெழுந்தருளினது. இரண்டாவது முறை சம்பூகவதத்திற்காக எழுந்தருளினது. அப்போது அவ்வரண்யபரிஸ்திதியைக்கண்டு பெருமாள் சொல்லுகிறார்— "**புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர**" என்று. [உத்தரராம சரிதே - பவபூதி:] முன்பு வெள்ளங்கோத்திருந்தவிடங்கள் இப்போது மணல்மேடிட்டுக் கிடக்கின்றனவென்கை. அதேரீதியாக முன்பு ஜ்ஞாநாநுஷ்டான புஷ்கலர்களான மஹநீயர்கள் மலிந்திருக்கப்பெற்ற இந்த காஞ்சீ க்ஷேத்ரம் இப்போது..........மேலே யெழுதுவதற்கு ஸங்கோசமாயும் லஜ்ஜையாயும் பீதியாயும் கேதமாயுமிருக்கிறது. பழைய சில மஹநீயர்களின் குணகீர்த்தனம்பண்ணி ஒருவாறு தரிக்கவேண்டியிருக்கிறது. அடுத்த பக்கத்தில் ஸேவைஸாதிக்கின்ற ஸ்ரீஉவே. உளுந்தைரங்காசாரியர்ஸ்வாமி திருநாடலங்கரித்து நாற்பது வருஷமாயிருக்கும். ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதிவீதியில் எழுந்தருளி

யிருந்தவர். எழுபது ஸம்வத்ஸரம் இவ்விபூதியை அலங்கரித்திருந்தவர். இந்த ஸ்வாமியின் தௌஹித்ரரும், சென்னை காகுமானி கலாசாலையில் உபாத்யாயபதவியை வஹித்துவரு பவருமான ஸ்ரீமான் உவே. ஆஸூரி. திருவேங்கடாசார்ய ரிடமிருந்த இந்த ஸ்வாமியின் திருவுருவப்படம் ஸமீப காலத்தில்தான் அடியேனுக்குக் கிடைத்தது. நெடுநாள் தேடிக்கிடைக்காதது கிடைத்ததனாலுண்டான ஆனந்தம் அபரிமிதம். இந்த ஸ்வாமியின் வித்யையும் விநயமும் ராஸிக்யமும் நினைக்கப்படும்போது நெஞ்சு குளிர்கின்றது. காவ்யநாடகாலங்கார க்ரந்தங்களிலும் இதிஹாஸ புராணங் களிலும் நல்ல உபஸ்திதியுள்ளவராயிருந்தார். தேவப் பெருமாளுடைய புறப்பாடுகளில் ஒரு சிறிய புறப்பாட்டை யும் இழவாமல் ஸேவித்துவந்தாரென்பது இந்த ஸ்வாமிக்கு விசேஷித்த சிறப்பு. இவருடைய ஸமகாலத்தவரும் ஸமவயஸ்கருமான ஸ்ரீஉவே. அஷ்டபுஜம் ரங்காசாரியர் ஸ்வாமியும் இந்த ஸ்வாமியும் தேவப்பெருமாளுடைய புறப்பாட்டு நாட்களில் இரண்டொருமணி காலம் முன்ன தாகவே திருமாளிகையைவிட்டுப் புறப்பட்டு வீதியார எழுந்தருள்வதும், உத்ஸவம் பரிபூர்தியடைந்த பிறகே திருமாளிகைக்குத் திரும்புவதுமான ஸந்நிவேசம் அடியேனுக்கு இற்றைக்கும் ப்ரத்யக்ஷம் போலிராநின்றது. இந்த ஸ்வாமிக்கு **உளுந்தை**யென்னும் அக்ரஹாரத்தில் ஸ்ரீவைஷ்ணவ சிஷ்யர்கள் இருப்பதனால் உளுந்தை ரங்காசாரியரென்று ப்ரஸித்தியுண்டாயிற்று. அஜாதசத்ருவென்றே இந்த ஸ்வாமிக்கு வ்யபதேசமிருந்து வந்தது. ஸ்ரீபெரும்பூதூரிலெழுந்தருளியிருந்த (கீர்த்திமூர்த்தியான) ஸ்ரீமத். உவே. ஆஸூரி மஹாஸ்வாமி (பெரிய ராமாநுஜாசாரியர் ஸ்வாமி) தமக்கு தேஹாநுபந்தியான இந்த உளுந்தை ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே அஸக்ருத் காஞ்சிக்கு எழுந்தருளும்படியா யிருக்கும். அந்தகால விசேஷங்கள் நினைவுக்குவரும்போது பல பரிதாபங்கள் மறையும். இந்த ஸ்வாமிக்கு ஸ்ரீரங்காசாரியரென்று திருநாமமுடைய ஒரு திருக்குமாரர் பண்டிதரா யும் ஸாத்விகராயுமிருந்தார். அவரும் பதினைந்து வருஷங்களுக்கு முன்னே ஆசார்யன் திருவடி சார்ந்துவிட்டார். ஸ்ரீயதோத்காரி ஸந்நிதி வீதியின் அழகே மிகமிகக் குறைந்துவிட்டது. மேலே ப்ரஸ்தாவித்த உளுந்தை ஸ்வாமியின் திருமாளிகைக்கெதிரில் ஸ்ரீமதித்யாதி. உவே. எம்பாவையங்கார் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான மஹான் எழுந்தருளியிருந்ததாகவும் அந்த ஸ்வாமி ஐம்பது ஸம்வத்ஸரகாலம் அவிச்சிந்நமாக காலை வேளைகளில் ஸ்ரீபாஷ்யப்ரவசன ரஹஸ்யக்ரந்த ப்ரவசனங்களும், மாலை வேளைகளில் பகவத்விஷய ப்ரவசனமும் நியமேந நடத்திப் போந்தாரென்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதிஹ-இதிஹ-என்னவேண்டிய காலமாய்விட்டது.





# ஸ்ரீராமாநுஜனன்பர்களுக்கு அறிவிப்பு

(1) நிகழும் விசுவாவஸு ௵ ஆடி மாதத்தில் ஸ்ரீராமாநுஜனுக்கு இருநூறுமாஸ பூர்த்தியென்பதை முன்னிட்டு இருநூறு உபந்யாஸங்களெழுதத் தொடங்கி நெ. 199ல் வெளியிடத்தொடங்கி அவ்வுபந்யாஸ சதத்வயத்தைப் பூர்த்திசெய்து வெளியிட்டாயிற்றென்பது அன்பர்களுக்குத் தெரிந்ததே. அது [**உபந்யாஸ சதத்வயம்**] தனிப்புத்தகமாக பயிண்டு செய்விக்கப்பட்டு ஸித்தமாகியுள்ளது. 390 பக்கங்கொண்ட இதன் விலை 4 ரூ. அபேக்ஷகர்கள் க்ரந்தமாலா ஆபீஸுக்கெழுதித் தருவித்துக்கொள்ளலாம்.

(2) நிகழும் விசுவாவஸு ௵ மார்கழித் திங்களில் ஸ்ரீராமாநுஜனுக்குப் பதினேழு பிராயம் பூர்த்தியாகிப் பதினெட்டாவது பிராயம் ஆரம்பமாயிற்றென்பதை முன்னிட்டு அதற்கு ஞாபகசின்னமாகப் பதினெட்டு விஷயங்களை உபஹரிப்பதாகவும், ஒவ்வொரு விஷயத்திலும் 18 மஹார்த்தங்களை விவரிப்பதாகவும், ஆகமொத்தம் முந்நூற்றிருபத்து நான்கு மஹார்த்தங்களை உபஹரிப்பதாகவும் விஜ்ஞாபித்து நெ. 204, 205ல் அது ஆரம்பம் செய்யப்பட்டது. உபஹரிப்பதாகப் பிரதிஜ்ஞைசெய்த பதினெட்டு விஷயங்களை மீண்டு நினைவூட்டுகிறேன்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வேதஸம்ஹிதையில் | 18 | 10. | பகவத் விஷயத்தில் | 18 |
| 2. | ,, ப்ராஹ்மணத்தில் | 18 | 11. | மூவாயிர வியாக்கியானத்தில் | 18 |
| 3. | ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் | 18 | 12. | ஆசாரியர் நால்வர் ஸூக்தி | 18 |
| 4. | பகவத்கீதையில் | 18 | 13. | ஸ்ரீவசனபூஷணத்தில் | 18 |
| 5. | பூர்வாசார்யக்ரந்த விவரணம் | 18 | 14. | தத்வத்ரயத்தில் | 18 |
| 6. | ராமாநுஜனும் ராமாநுஜரும் | 18 | 15. | முமுக்ஷுப்படியில் | 18 |
| 7. | மநுஸ்மிருதியில் | 18 | 16. | ஆசார்யஹ்ருதயத்தில் | 18 |
| 8. | ஸ்ரீராமாயணத்தில் | 18 | 17. | வேதாந்தார்யக்ருதிகளில் | 18 |
| 9. | ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் | 18 | 18. | மணவாளமாமுனிகள்பற்றி | 18 |

இங்ஙனே குறிப்பிட்ட பதினெட்டு விஷயங்களில் 1 to 7 விஷயங்கள் நெ. 204, 205ல் வெளிவந்துவிட்டன. (அதாவது 126 மஹார்த்தங்கள் வெளிவந்தனவென்றபடி.) இந்த ஸஞ்சிகையில் "ஸ்ரீ ராமாயணத்தில் 18" என்னுமொருவிஷயம் மட்டும் [ஸஹஸ்ரநாம பாஷ்ய விவரண ரூபமாக] வெளியிடப்பட்டுள்ளது. மிக்குள்ள பத்துவிஷயங்கள் [180 அர்த்தங்கள்] அடுத்த இதழில் க்ரமேண வெளிவரும்.

(3) 8—4—66௳ பங்குனி விசாகத்தின் நினைவு மலராக எழுபத்தைந்து விண்ணப்பங்கள் தனிப் புத்தகமாக அச்சாகிவருகிறது. அது 1-4-66ல் பூர்த்தியடைந்து வெளிவரும். அது ஸ்ரீ ராமாநுஜனில் சேர்ந்ததன்று. அபேக்ஷையுள்ளவர்கள் ஒரு ரூபா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்வது.

(4) விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு பட்டர் பாஷ்யத்தை யடியொற்றி அடியேனெழுதிய தமிழ் வியாக்கியானம் ஏற்கெனவே மூன்று பதிப்பானது இப்போது நான்காவது பதிப்பாகி வெளிவந்துள்ளது. கிரந்தமாலா ஆபீஸிலும், சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா கார்யாலயத்திலும் கிடைக்கும். விலை 1–50.

(5) **ஸம்ஸ்க்ருத பாலயுவசிக்ஷா.** இதுவொரு அபூர்வமான நூல் வெளிவந்துள்ளது. நாலாறு மாதத்தில் ஸம்ஸ்க்ருதத்தில் தாராளமாகப் பேசவுமெழுதவும் திறமையைக் கற்பிக்குமதான இப்புத்தகம் பாலர்களுக்கும் யுவாக்களுக்கும் மிகமிக அவசியமானது. பிராமணர்களாய்ப் பிறந்தவர்கள் ஸம்ஸ்க்ருதபாஷை தெரியாமலிருக்கக் கூடாது. தெரியாமலிருப்பது பெரிய குறையேயாகும். அக்குறையை அறவே தீர்ப்பது இப்புத்தகம். இதில் கையாளப்படாத ஸம்ஸ்க்ருதபதம் [முக்கியமானது] இல்லவேயில்லையென்று சொல்லமுடியும். தாதுபாடமும் இதில் சேர்ந்துள்ளது. பள்ளிக்கூடம் சென்று படிக்கும் பிள்ளைகளும் இதை அகத்தில். படிப்பது மிக நன்று விலை 1-50. க்ரந்தமாலா and சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா கார்யாலயத்தில் கிடைக்கும்.

(6) **ஸத்க்ரந்த ப்ரகாசநஸபா புத்துயிர்பெற்றது.** இதைப் பற்றிச்சென்றவிதழில் (208ல்) பக்கம் 80ல் சுருக்கமாக ப்ரஸ்தாவம் செய்திருந்தோம். அதன் விவரம் இப்போது தெரிவிக்கலாகிறது. 15 வருடங்களுக்கு முன்பு பல வழிகளிலும் உழைத்துக் கொண்டிருந்த ஸத்க்ரந்தப்ரகாசனஸபை இடையில் 15 வருஷகாலம் ஆதரவில்லாமல் உறக்கமாயிருந்தது. இது நேற்று மார்கழி முடிவில் ஆண்டாள் திருக்கல்யாணதினத்தினன்று ஆண்டாள் கடாக்ஷமே முக்கிய காரணமாய்த் தகுந்த ஆதரவுபெற்று முன்போலவும் முன்னிலும் அதிகமாகவும் உழைக்கத்தொடங்கிவிட்டது. இனி நமது தமிழ் தெலுங்கு பதிப்புகளெல்லாம் இச்சபையின்மூலமாகவே வெளிவரும். வைகாசி மாதத்திலிருந்து நமது ஸம்ஸ்க்ருத நூற்பதிப்புகளும் இச்சபையின் மூலமாகவே வெளிவரத் தொடங்கும். வருஷச்சந்தாவாக 25 ரூ. செலுத்துபவர்கள் இச்சபைக்கு மெம்பர்களாவார்கள். டொனேஷனாக 100க்கு மேல் ஸௌகரியம்போல் செலுத்துமவர்கள் சாச்வத மெம்பர்களாவார்கள். 25 ரூ. செலுத்தும் ஆர்டினரி மெம்பர்களுக்கு இச்சபையின் மூலமாக வெளிவரும் நூல்களெல்லாம் இரண்டு காபி வீதம் அனுப்பப்பட்டுவரும். மாதப் பத்திரிகை தனிச்சந்தா இல்லாமல் அனுப்பப்பட்டுவரும். தமிழ் வகுப்பிலோ தெலுங்கு வகுப்பிலோ எதில்சேர விருப்பமானாலும் அதை முன்னாடியே ஆபீஸுக்குத் தெரிவித்துக்கொள்ள வேண்டும்.

இந்த ஸபைக்கு பிரஸிடெண்டு P. B. அண்ணங்கராசாரியார். பேட்ரன் M. ஏகாம்பர முதலியார். தனாதிகாரி R. நாராயணன். ஸெகிரிடெரிகள் V. N. தேவநாதன் and S. அண்ணாமலை. ஆபீஸ் 213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, மதராஸ் G.T. மாதப் பத்திரிகையின் சந்தாப் பணமும் ஷை ஸபைக்குச் செலுத்தும் சந்தாவும் மேலே குறித்த ஆபீசிலும் செலுத்தப்படலாம். இச்சபையின் அபிவிருத்திக்கு ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயாபிமானிகள் யாவரும் ஒத்துழைக்கவேணுமென்று பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

இங்ஙனம், P. B. A. பத்திராதிபர்.

# ஸ்ரீமத். பரமஹம்ஸேத்யாதி [வர்த்தமாந] ஸ்ரீமத். திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி.



ப்ரக்ருதம் ஒரு லோக க்ஷேமகரமான ஸந்தோஷ விஜ்ஞாபனம். விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள் நமக்குத் தேனும் பாலுங் கன்னலுமமுதுமாக வருளிச்செய்துள்ள ரஹஸ்ய வியாக்கியானங்கள் நான்கும் அநுபோக்தாக்களுக்கு ஒரேஸம்புடமாக அமைந்திருக்க வேணுமென்கிற ஆசையினால் அடியேன் இருபத்தைந்து ஆண்டுகட்குமுன் ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை [ஸு 1940ல்] தெலுங்கு லிபியில் அச்சிட்டு ஸ்ரீ வைஷ்ணவவுலகில் பரவச் செய்திருந்தேன். ஐந்தாறுண்டுகளாகவே அந்த ப்ரதி துர்லபமாய்விட்டது. அதை மணிப்ரவாள லிபியில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி ஸந்நிதியிலிருந்தே ஸூஷ்டு முத்ரித ப்ரகாசிதமாக வேணுமென்று ப்ரார்த்தித்துவிண்ணப்பம் விடுத்திருந்தேன். அங்ஙனமே திருவுள்ளமுகந்தருளியாயிற்று. முத்ரணமும் தொடங்கி நடைபெற்று வருவதாகக் கேட்டு அம்ருத ஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவனாயிரா நின்றேன். ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமி போன்ற ப்ரமாதாக்கள் ப்ரமேயரக்ஷணம் செய்தருளி வருவது போலவே ப்ரமாண ரக்ஷணமும் செய்தருள்வது ப்ராப்தமேயன்றே. ... ❀

# 8. ஸ்ரீராமாயணத்தில் பதினெட்டு மஹார்த்தங்கள்

சிறு விண்ணப்பம் :— ஸ்ரீராமாயண விஷயமாக அடியேன் பலநூல்களும் பல வியாஸங்களும் எழுதி வெளியிட்டிருப்பதனால் இப்போது அபூர்வமாகப் பதினெட்டு விஷயங்கள் என்ன எழுதப்போகிறேனென்று திகைக்கிறேன். "ராமாவதார மென்றால் பட்டர் போர பக்ஷபதித்திருப்பர்" என்று நம் ஆசார்ய கோஷ்டியில் ஸுப்ரஸித்தமாகையாலே ஸ்ரீராம பக்ஷபாதியான பட்டருடைய திருவடிகளைச் சிந்தித்தேன்; ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் ஒரு சிறந்த கெட்டம் நினைவுக்கு வந்தது. அதாவது * ராமோ விராமோ விரதঃ * இத்யாதி திருநாமங்களுக்கு முன்னே "பரர்த்திঃ



பரமஸ்பஷ்டঃ" என்னுமிடத்தில் பட்டர் தம்முடைய பாஷ்யத்தில் "அத ம்ருதஸஞ்ஜீவநம் ராமசரிதம்" என்றருளிச் செய்துள்ளார். (பரர்த்திঃ) என்கிற திருநாமம் முதலாக ம்ருதஸஞ்ஜீவினியான ராமகதை சொல்லப்படுகிறது என்றபடி. பரர்த்திঃ, பரமஸ்பஷ்டঃ துஷ்டঃ புஷ்டঃ சுபேக்ஷணঃ ராமঃ விராமঃ விரதঃ மார்க்கঃ நேய: நயঃ அநயঃ, வீர: சக்திமதாம்ச்ரேஷ்டঃ தர்மঃ தர்மவிதுத்தம:— என்கிற பதினாறு திருநாமங்களும் ராம சரித்திரங்களைத் தெரிவிப்பனவாகத் திருவுள்ளம் பற்றினபடி. இத்திருநாமங்களை விவரிக்கும் முகத்தால் "ஸ்ரீராமாயணத்தில் பதினெட்டை" முடித்து

க்ருதக்ருத்யனுகிறேன். இந்த ஸ்தலத்தில் ராம: என்கிற திருநாமம் ஆருவதாக இருந்தாலும் ப்ராதாந்யாத் அதை முதலில் எடுத்துக்கொள்ளுகிறேன். "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா:" என்கிற வால்மீகி ஸூக்திப்படியே ராம னென்கிற திருநாமத்தை மூன்று விசை யெடுத்து மூன்று விதமாக உரைசெய்து பதினெட்டென்னும் லக்கத்தைப் பூர்த்தி செய்கிறேன்.] .... .... *

1. ராம:—'ரமதே' இதி ராம:.' ரமு·க்ரீடாயாம் என்று தாதுவாகையாலே விளையாடுபவன் என்று பொருள்படும். "த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை:, ஹரே! விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி:" என்று நாரத முனிவர் கூறினபடியே, சிறுவர்கள் பந்துகளைக் கொண்டு விளையாடுமாபோலே எம்பெருமான் பிராணிகளை வைத்துக்கொண்டு விளையாடுகிருன். பந்தானது வெளுப்பு நூல் கறுப்புநூல் சிவப்பு நூலாகிய மூன்றுகிற நூல்களாலே கட்டப்பட்டிருப்பது போல பிராணிகளும் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற மூன்று நிறமுள்ள குணங்களமைந்திருப்பர்கள். பந்தானது விஹாரகாலத்தில் மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பது போல, பிராணிகளும் "தே தம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடியே மேலே போவதும் கீழே விழுவதுமாயிருப்பர்கள். இங்ஙனே விளையாடும் பரம புருஷன் இராமனுகத் திருவவதரித்து "ராமஸ் து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந் ருதூந்" என்று வான்மீகி பேசும்படி பிராட்டி யொருத்தியோடே விளையாடினன். "ராமஸ் ஸ ஸீதயா ஸார்த்தம்" என்னுதே (ராமஸ்து) என்றது ஸாபிப்ராயம். (து) என்னு மவ்யயம் வ்யாவ்ருத்தியைச் சொல்லும். இதுவரையில் பெருமாள் பித்ரு சுச்ரூஷையிலும் தர்மப்ரவர்த்தனத்திலும் தேவதா ஸமாராதனத்திலும் புகழ்படைத்திருந்தவர் இப்போது பிராட்டியோடே சேர்ந்தவாறே வேறுபட்டார். ச்ருங்கார கேளிகளிலே பரமரஸிகரென்று புகழ்பெற்றபடியைச் சொல்லுகிறது. .... *

2. ராம:—ரமதே என்பதற்கு உள்ளம் குளிரப் பெறுகிருரென்பதும் பொருளாகையாலே அப்பொருளைக் கொண்டு அநுபவிப்பதும் பாங்கு. அன்பர்களோடு கலக்கப் பெற்றும் அன்பர்களின் காரியத்தைத் தலைக்கட்டியும் உள்ளம் குளிருபவர் பெருமாள். [குஹேந ஸஹிதோ ராம:] ராமன் குஹனேடு சேர்ந்தானென்று இதற்குப் பொருளன்று; குஹேந ஸஹிதஸ் ஸந் ராம:—குஹனேடு சேர்ந்த பின்பு ராமனுனென்றே ஆசாரியர்களருளிச் செய்வது. குஹனேடு சேர்ந்து உள்ளங் குளிர்ந்தானென்கை. மற்றேரிடமுங் காணலாம்; [க்ருத க்ருத்யஸ் ததா ராம:]* அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம். க்ருதக்ருத்யஸ் ததா ராம:* விபீஷணுழ்வானுக்கு முடிசூட்டித் தன் காரியம் தலைக்கட்டிற்ருக நினைத்து [ததாராம:] அப்போது தான் ரதியை யடைந்து ராமனுயின னென்கை. பெருமாள் செய்தருளின ஒவ்வொரு காரியமும் அவர் தம்முடைய திருவுள்ளத்தைக் குளிரச் செய்ய வல்லதேயாயிற்று. குஹஸுக்ரீவ மாருதி விபீஷணுதிகள் பக்கலிலே காட்டின அநுக்ரஹ விசேஷத்தினுல் திருவுள்ளம் குளிர்ந்தது போல, தாடகாதாடகேயவிராத கரதூஷண ராவணுதிகள் பக்கலிலே காட்டின நிக்ரஹத்தினுலும் ஆச்ரித விரோதிகள் தொலை

யப் பெற்றோமென்று திருவுள்ளம் குளிர்ந்திருக்கக் குறையில்லை. ஆக, 'ரமதே இதி ராம:' என்கிற வ்யுத்பத்தியினால் ஸ்ரீராமாயணத்தில் பல ப்ரகரணங்கள் ஸங்க்ருஹீதங்களாகும். .... .... .... .... .... *

3. ராம:—'ரமயதீதி ராம:' என்கிற வ்யுத்பத்தியும் பொருந்தும். தன்னைக் காண்பவர்களையும் தன் சரிதை கேட்பவர்களையும் மகிழ்விப்பவர் பெருமாள். உலகத்தில் அதிகாரிகள் வெவ்வேறு பட்டிருப்பர்களாதலால் ஒரே குணத்தினால் எல்லாரையும் ஏக ரூபமாக மகிழ்விக்க முடியாது. "ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:. குரூந் சுச்ரூஷயா வீர: தநுஷா யுதி சாத்ரவாந்." என்றாப்போலே ஒவ்வொருவர் பக்கலிலே ஒவ்வொரு குணத்தைச் செலுத்தி மகிழ்விப்பது ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஸௌந்தர்யம் பொறுமை தயவு வாத்ஸல்யம் வீரம் என்றிவை முதலான பல திருக்குணங்களுக்குக் கடலாயிருக்கின்ற பெருமாள் திருநாட்டிலே விலை செல்லகில்லாத திருக்குணங்களை விலை செல்லச் செய்வதற்காகவே இம்மண்ணுலகில் வந்து அவதரித்தபடியினால் அத்திருக்குணங்களிலே அவரவர்களை யீடுபடுத்தி மகிழ்விக்கச் சொல்லவேணுமோ? குஹப்பெருமாளை ஸௌசீல்யத்தாலே மகிழ்வித்தான். ஸௌசீல்ய மென்பதும் சீல மென்பதும் பர்யாயம். தன் மேன்மை பாராதே தண்ணியரோடும் கலந்து பரிமாறுகை சீல குணத்தின் காரியம். இக்குணத்தினால் காரியங் கொண்டது தான் ஸ்ரீராமாயணத்தில் அதிகம். ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களாலே தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகளை யீடுபடுத்தினது பெரிதன்று; காதும் மூக்கு மறுப்புண்டு கதறியழுது கொண்டே கரதூஷணாதிகளிடம் செல்லலுற்ற சூர்ப்பணகை "தருணௌ ரூப ஸம்பந்நௌ ஸுகுமாரௌ...புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ, கந்தர்வராஜ ப்ரதிமௌ பார்த்திவ வ்யஞ்ஜநாந்விதௌ" என்று சொல்லிச் சொல்லிப் புலம்பும்படி செய்ததே சிறப்பு. இங்ஙனே ஓரோ குணங்களைக் காட்டி ஒவ்வொருவரையும் ரமிப்பித்தது பன்னியுரைக்குங்காற் பாரதமாம். .... .... *

4. பார்த்தி:—'பரா ருத்தி: யஸ்மிந் ஸ:—பரர்த்தி:' ருத்தியாவது ஸம்ருத்தி. மிக்க ஸம்ருத்தியையுடையவனென்றபடி. செல்வம் மல்கியிருப்பவனென்கை. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் *செல்வம் மல்கு குடித் திருவிண்ணகர்* செல்வம் மல்கி யவன்கிடந்த திருக்கோளூர் * செல்வம் மல்கு தென்திருக்குடந்தை* என்றாப்போலே யருளிச்செய்கிறார்கள்; இவ்விடங்களில் கல்யாணகுண ஸம்ருத்தியையே முக்கியமான செல்வமாக வியாக்கியானித்தருளுகிறார்கள். "பவாந் ஸர்வத்ரைவ து அகணித மஹாமங்கல குண:" என்று ஆழ்வானருளிச்செய்தபடி எம்பெருமானுடைய ரூபங்களெல்லாவற்றிலுமே குணபூர்த்தி குறையற்றிருந்தாலும் ஸ்ரீராமாவதார மொன்றில்தான் குணபௌஷ்கல்யம் விசேஷித்துக் காணலாயிருக்கும். ஸ்ரீராமாயணத்தில் கயிறுபோட்டு எந்த இடமெடுத்தாலும் அவ்வவ்விடமெல்லாம் குண கீர்த்தன ப்ரசுரமாகவே காணலாகும். ஸ்ரீராமாயணத்தின் உபக்ரமமே குணங்களைப்பற்றின வினாவிடை. சக்ரவர்த்தி திருக்குமாரனை முடிசூட்டித் தான் தவம் புரியப் போவதாக அறுதியிட்டு மஹாஸபைகூட்டி ப்ரஜைகளின் அபிப்ராயத்தை

வினவும்போது "அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்தஸ் த்வமஸி பார்த்திவ!"—கிழவா! ஒழிந்து போ, கிழவா ஒழிந்து போ என்றார்கள். பிறகு சக்ரவர்த்தி பிரஜைகளை நோக்கிக் கேட்கிறான். உங்களைக் கேளாமலே நான் வஸிஷ்டாதிகளோடு மட்டும் கலந்து முடிவு செய்யலாமாயிருக்கச் செய்தேயும் உங்களுக்கொரு பெருமை கொடுக்க வேண்டிக் கேட்டேன்; நீங்களும் பெருந்தன்மையுடன் விடை கூறியிருக்கலாம். 'உமக்கு இஷ்டமானபடி செய்க' என்று விநயமஸ்ருணமாகச் சொல்லியிருக்கலாம். அதைவிட்டு, இதுவரையில் நான் அதர்மராஜ்யம் செய்ததுபோலவும், நீங்கள் என்னை விட்டு நீங்குவதற்கு ஸமயம்பார்த்திருந்தது போலவுங் காட்டி என்னிடத்திலே மிக்க வெறுப்புத் தோற்றப் பேசினீர்களே, நான் செய்த தவறு என்ன? என்று. அதற்குப் பிரஜைகளின் விடை யாதெனில்; [பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே] மஹாப்ரபோ! உம்மிடத்தில் ஒரு குறைகண்டு சொன்னோமல்லோம்; நீர் பெற்ற பிள்ளை * குணநாமாகரோ மஹான் * என்னும்படியிருக்கையாலே அவன் கோற்கீழே வாழவேணுமென்னு மாசையொழிய வேறில்லை என்றார்கள். ஸ்ரீராம குணங்களை வாயாரச் சொல்லிச் சொல்லிக் கண்ணீர் பெருக்குகிறார்கள். (அயோத். இரண்டாவது ஸர்க்கம் காண்க.) இங்ஙனே காண்டந்தோறும் ராமகுணங்கள் ஸர்க்கம் ஸர்க்கமாக ஒவ்வொருவர் முகமாய்ப் பேசப்படுகையாலே இப்படிப்பட்ட குணஸம்ருத்தியையிட்டுப் பரர்த்தி: என்கிறது. இனி "பரேஷாம் ருத்திரேவ (ஸ்வஸ்ய) ருத்தி: யஸ்ய" என்று கொண்டு பரஸம்ருத்தியே பேறாயிருப்பவன் இராமன் என்றுங் கொள்ளத்தகும். ஸுக்ரீவ விபீஷணாதிகளுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவைக்காமல் தான் முடிசூடுவதில்லை யென்றிருந்தபடியால் இத்திருக்குணம் நன்கு விளங்கும். "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" என்ற விடம் பரஸம்ருத்தியையே பேணுமவர் பெருமாள் என்பதற்கு முக்கியமான சான்றாகும். லங்காத்வாரத்தில் பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே ராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே 'ராஜத்ரோஹியான பையல் பெருமாள் திருமுன்பே நிற்கையாவதென்?' என்று ஸுக்ரீவமஹாராஜர் அவன்மேலே யெழப்பாய்ந்து வென்று வந்தபோது பெருமாள் அருளிச்செய்கிறார் [ஏவம் ஸாஹஸ யுக்தாநி ந குர்வந்தி ஜநேச்வரா:] சிலர்மேல் விழவேண்டினால் பரிகர பூதரையன்றோ ஏவவேண்டுவது; தலைவராயிருப்பாரோ மேல்விழுவது? [த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம?] பிராட்டியைப் பெறுவதற்காகவன்றோ நாம் இத்தனை பாடு படுவது; உம்முடைய பெருமைக்கு ஒரு குறை விளையுமாயின் அந்தப் பிராட்டியினால் தான் எனக்கென்ன? என்று இங்ஙனே சொன்ன பெருமாள் பரஸம்ருத்திக்கு விரோதமின்றியிலே ஸ்வஸம்ருத்தியைப் பேணுமவரென்று விளங்குகின்றதாயிற்று.

5. பரமஸ்பஷ்ட:—* ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம் * ந மாம்ஸ சக்ஷுரபிவீக்ஷதே தம் * என்றேனும் கட்கண்ணால் காணாதவவ்வுரு * இத்யாதிப்படியே ஒருவர் கண்ணுக்கும் காணவொண்ணாதிருந்த வடிவத்தை அனைவரும் கண்டுகளிக்கும்படி மிகவும் ஸ்பஷ்டமாக்கிக் கொடுத்தவ னென்கை. ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் (10) "க்ஷோதீயஸோபி ஹி ஜநஸ்ய க்ருதே க்ருதீ த்வம் அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:" என்றருளிச் செய்ததை

இங்கே யநுஸந்திப்பது. பரம ஸ்பஷ்ட: என்பதற்கு - பரமத்வம் ஸ்பஷ்டமாயிருக்கப் பெற்றவர் என்கிற பொருள் பட்டருடைய பாஷ்யத்தில் விளங்குமது. 'பரத்துவத்தை யொளித்து வந்து அவதரித்திருக்கச் செய்தேயும் அது சிலர்க்கு ஸ்பஷ்டமாக விளங்கா நின்ற தென்பதை ஸ்ரீ ராமாயணத்தினுலறிகிறேம். பெருமாளுடைய வநவாஸப்ரஸங்கத்தில் கிலேசப்படா நின்ற கௌஸல்யாதேவியைத் தேற்றுகின்ற ஸுமித்திரை "ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய:......தைவதம் தேவதாநாஞ்ச" இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தைத் தான் ஸ்பஷ்டமாகக் கண்டறிந்து பேசுகிருள். இராவணன் மாண்ட பிறகு ப்ரேத பூமியிலே வந்து புலம்புகிற மந்தோதரி * வ்யக்தமேஷ மஹாயோகீ பரமாத்மா ஸநாதந:, அநாதிமத்யநிதநோ... தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:. ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யச் சாச்வதோ த்ருவ:. மாநுஷம் ரூபமாஸ்தாய விஷ்ணுஸ் ஸத்யபராக்ரம:. * இத்யாதியாலே பெருமாளுடைய பரத்துவத்தை அதிஸ்பஷ்டமாகக் கண்டு பேசுகிருள். பம்பாதீரத்தில் முதன்முதலாகப் பெருமாளைக் காணவந்த திருவடி "ஆயதாச் ச ஸுவ்ருத்தாச் ச பாஹவ: பரிகோபமா:, ஸர்வபூஷண பூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:? *" என்று கேட்கிருர். இங்கு 'ஆயதௌ ச ஸுவ்ருத்தௌ ச பாஹூ தே பரிகோபமௌ' என்று த்விவசனமாக சுலோகம் கூடுமதாயிருக்க பஹுவசனமிட்டுச் சொன்னதுபற்றி கோவிந்தராஜர் எழுதுகிருர்.—"ஹநுமதோ பக்தத்வேந தஸ்ய சதுர்ப்புஜவேஷேண த்ருச்யோபவத்" என்று. (அதாவது) திருவடி பரமபக்தராகையாலே அவர்க்கு நிஜரூபத்தைக் காட்டினுரென்றபடி. அன்றியும் ஸமுத்ர சரணுகதி ப்ரகரணத்தில் பெருமாள் தலையணையாக வைத்துக்கொண்ட பாஹுவை வருணிக்கின்ற வான்மீகி முனிவர் "புஜை: பரமநாரீணும் அபிம்ருஷ்ட மநேகதா" என்கிருர். இங்கு பரமநாரிகளாகச் சொன்னது ஸ்ரீதேவீ பூதேவீ நீலாதேவிகளை யென்று வியாக்கியானம். ஆகவே வான்மீகி முனிவரும் பெருமாளுடைய பரத்வவேஷத்தை ஸ்பஷ்டமாகக் கண்டவரென்று விளங்கும். ஆக இவ்வளவால் பெருமாளுடைய பரமஸ்பஷ்டத்வம் நிரூபிதமாயிற்று. ... ... ... *

6. துஷ்ட:=ஸந்துஷ்ட: என்றபடி. பெருமாளுடைய அவதாரத்தைப் பேசுகின்ற நம்மாழ்வார் * நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய் * என்கிருர். "கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத கஷ்டங்களை யெல்லாம் பட்டு" என்கிருர்கள் வியாக்க்யாதாக்கள். "துக்க ஸம்வேதநாயைவ ராமே சைதந்ய மாஹிதம்" [உத்தரராமசரிதே.] என்று பெருமாள் தாமே சொன்னதாக பவபூதிகவி யெழுதுகிருர். இவற்றால் பெருமாளுடைய திருவுள்ளம் ஸந்தோஷமற்றிருக்கும் போலுமென்று நினைக்க இடமுள்ளது. உண்மை அப்படியில்லை. ஸம்ஸாரிகளின் ஸமுஜ்ஜீவனுர்த்தமாக வந்து அவதரிக்கப் பெற்றேமிறே யென்று திருவுள்ள முகந்தேயிருப்பர். முடி புனைந்து நாட்டையாளப் பாரித்திருக்கையில் சடை புனைந்து மரவுரியுடுத்துக் காட்டுக்குச் செல்ல நியமனம் பெற்றபோது எவ்வளவோ துக்கமாகத் தானே யிருந்திருக்குமென்று பலர் நினைக்கக் கூடும். அப்போதும் பரம ஸந்தோஷத்தையே யாயிற்று பெருமாள் கொண்டது. "ராஜ்யம் வா வநவாஸோ வா வநவாஸோ மஹோதய:" என்றவரன்றே பெருமாள். இவ்விடத்தில் கம்பருடைய

வாக்கு மிக வற்புதமானது. "இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்கெளிதோ? யாரும் செப்பருங் குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின், ஒப்பதே முன்பு, பின்பு வாசக முரைக்கக் கேட்ட, அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற தம்மா." என்பது அவருடைய ஆச்சரியமான செய்யுள். வனவாஸக் கட்டளை பெறுவதற்கு முன்னே இராமபிரானுடைய திருமுக மண்டலம் தாமரை போன்றிருந்ததாம்; அக்கட்டளை பெற்றவாறே அத்திருமுகம் அப்போதலர்ந்த செந்தாமரையை வென்றிட்டதாம். கொடிய வனம் போக நேர்ந்ததே யென்று சிறிதும் சோகியாமல், புண்ணிய புனல்களாடவும் புண்ணிய புருஷர்களைத் தொழவும் வாய்ப்பு கிடைத்தமைக்குப் பரம ஸந்தோஷ மெய்தினனென்கை. * உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரி துஷ்யதி * என்று பௌரஜனங்கள் நேரில் கண்டு சொன்னபடியே தனது நாட்டிலுள்ளவர்களுக்கு நேரும் ஸந்தோஷத்தைத் தன்னுடைய ஸந்தோஷமாகக் கொண்டு மகிழ்பவன். "அபிஷிச்ய விபீஷணம் விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்கிற படியே அன்பர்களை ஸந்தோஷப்படுத்தித் தான் ஸந்தோஷாதிசய மடைபவன். ... *

7. புஷ்ட:=கீழே துஷ்ட: என்கிற திருநாமத்தினால் சொன்ன ஸந்துஷ்டதையை நன்கு நிலைநாட்டுகின்றது இந்தத் திருநாமம். தான் அடையும் ஸந்தோஷம் வடிவிலே காணலாம்படி யிருப்பவன். 'உள்ளத்தின் மகிழ்ச்சி உடலிலே தெரியும்' என்பராதலால் ஹ்ருதயகதமான ஸந்தோஷத்தைத் திருமேனி கோட்சொல்லித் தரக்கடவதாயிருக்கும். வனவாஸக் கட்டளை ப்ராப்தமானபோது "வநவாஸோ மஹோதய:" என்று சொன்னது க்ருத்ரிமமென்று நினைக்க வொண்ணாதபடி திருமேனி புகர்த்துக் காட்டுமென்கை. வனவாஸம் ப்ராப்தமாவது பரம ஸந்தோஷத்திற்கே ஹேதுவென்று சொன்னதைச் சிறிது சோதிக்குமளவில் அது அஹ்ருத யோக்தியே யொழிய ஸஹ்ருதயோக்தி யன்றென்று அறுதியிடலா யிருக்கும். (எங்ஙனேயென்னில்) மேலே ஆரண்யகாண்டத்தில் ஸீதாவியோகம் நேர்ந்தபோது துக்கபரவசராய்க் கதறுகின்ற பெருமாள் *ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமா லக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம். * என்று சொல்லிப் புலம்புகிறார். 'ஐயோ! ராஜ்யத்தை யிழந்தேனே! காட்டிலே வந்து வஸிக்கவும் நேர்ந்ததே!' என்று சொல்லுவது 'வநவாஸோ மஹோதய:' என்றதற்கு நேர்முரணல்லவா? வனவாஸக்கட்டளை ஸந்தோஷகரமா யிருந்தால் 'ராஜ்யாத் ப்ரம்ச:' என்றும் 'வநேவாஸ:' என்றுஞ் சொல்ல வாயெழும்புமோ? 'ஈத்ருசீ இயம் மம அலக்ஷ்மீ:' என்று ராஜ்யப்ரம்ச வனவாஸங்களை தௌர்ப்பாக்ய மாகவன்றோ சொல்லுகிறார். இவை பொருந்தும்படி எங்ஙனேயென்று விசிகித்ஸை பண்ணுவர்கள். இதற்கு நம்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்;

> "*ராஜ்யநாசோபகர்ஷதி* வநவாஸோ மஹோதய: * என்று சொல்லிப் போந்தவற்றை இப்போது அனர்த்தமாகச் சொல்லுகிறதென்னென்னில், ஆச்ரித ஸம்ச்லேஷத்துக்கும் ரிஷிகளை நோக்குகைக்கு மென்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப் பிரிகையாலும் பெரியவுடையாரை யிழக்கையாலும் இவற்றுக்கு அடியானவையும் இப்போது அனர்த்தமாகத் தோற்றினபடி."

என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. (இதைச் சிறிது விவரிக்கிறேன்) வனத்திற்குப் புறப்படும்போது எதனால் ஸந்தோஷமென்னில்; பிராட்டியோடு ஏகாந்தவாஸம் பண்ணப் பெறுவோம், பரமபாகவதர்களோடே ஸஹவாஸம் பண்ணப்பெறுவோம் என்றிங்ஙனே பாரித்ததனால் ஸந்தோஷமுண்டாயிற்று. பாரித்தபடியே பேறுகிடைத்து வந்தது. *வைதேஹி! ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ* என்று வாய்வெருவும்படி பிராட்டியோடே கூடியிருந்து குளிரப்பெற்றது. * இஹ வத்ஸ்யாமி ஸௌமித்ரே! ஸார்த்தமேதேந பக்ஷிணா* என்று ஜடாயு மஹாராஜருடைய சிறகின் கீழே யொதுங்கி வர்த்திக்கவும் பெற்றது. இந்த நிலைமையில் "ஹா ஹந்த ஹந்த! நலிநீம் கஜ உஜ்ஜஹார" என்னும்படியாகப் பிராட்டியைப் பிரியவும் ஜடாயுமஹாராஜரை அறவே யிழக்கவும் நேர்ந்தது. இந்த துக்கம் சொல்லுவித்த வார்த்தையன்றோ "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸ:' என்பது. இதனால் காட்டுக்குப் புறப்படும்போதே ஸந்தோஷமில்லாமல் வருந்தியே புறப்பட்டதாக எண்ணத்தகுமோ? பரம குதூஹலத்தோடு மஹோத்ஸவம் ஸேவிக்கத் திருவேங்கடமலை சென்றவர் அங்கு இடமும் சோறும் தண்ணீரும் பெறாமல் அப்பன் ஸேவையும் பெறாமல் வெய்யிலிலும் மழையிலும் பரிதபித்துக் கிடக்க நேர்ந்ததென்று கொள்வோம்; அப்போது 'ஏதுக்கு வீட்டைவிட்டு இங்கே வந்து வருந்துகிறோம்!' என்று தளர்ந்தால், இதனால் ஊரைவிட்டுப் புறப்படும்போதிருந்த குதூஹலத்தை இல்லைசெய்யவொண்ணுமோ? இலங்கைசென்ற திருவடி அசோகவனத்தில் பிராட்டியைக் கண்டவாறே "அநயா ஹீந: ப்ரபு:, தாரயதி ஆத்மநோ தேஹம் நசோகேந அவஸீததி' என்று சொன்னது பெருமாளை கர்ஹிக்குமாபோலே யிருந்தாலும் (புஷ்ட:) என்னுமிந்தத் திருநாமத்தை வியாக்கியானம் பண்ணுமாபோலவே யிராநின்றது. 'வாடாமல் வதங்காமல் புஷ்டராகவே யிருக்கிறார் பெருமாள்' என்று காட்டினபடியாகக் கொள்ளலாம். இல்லையாகில் 'ஜீவதி' என்று மூன்றெழுத்தோடே முடிக்கலாமே; 'தாரயதி ஆத்மநோ தேஹம்' என்ற விரிவு தேஹபுஷ்டியை அந்தரங்கமாகக் காட்டவேபோலும். .... *

8. சுபேக்ஷண:=பெருமாளுடைய திருக்கண்ணழகிலே யீடுபட்டவர்கள் சக்ரவர்த்தியும் சபரியும் திருவடியுமாவர்கள். 'என் வேள்வியைக்காக்க உன் பிள்ளையைப் போரவிடாய்' என்று விச்வாமித்ர முனிவன் வேண்டினபோது *ஊநஷோடச வர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:* என்று விடையிறுத்த சக்ரவர்த்தியின் கருத்துகள் பலவுண்டு; அவற்றுள் ஒரு கருத்து—இக்கண்ணழகனை விட்டுப் பிரிந்து எங்ஙனம் தரித்திருப்பேனென்கை. சபரி தன்னாச்ரமத்தேறப் போந்த பெருமாளைக் கண்டவாறே *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந!* என்று அவருடைய கண்ணழகிலே தான் ஈடுபட்டமையைத் தெரிவித்துக்கொண்டாள். இவற்றுக்கெல்லாம் மேம்பட்டது திருவடியின் வார்த்தை. அதாகிறது [* ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமநோஹர:*] திருவடியோடு ஸம்பாஷணை செய்யும் பிராட்டி "யாநி ராமஸ்ய சிஹ்நாநி...தாநி பூயஸ் ஸமாசக்ஷ்வ ந மாம் சோக: ப்ரதக்ஷ்யதி" என்று பெருமாளுடைய அடையாளங்களைச் சொல்லும்படி கேட்டவாறே முந்துறமுன்னம் "ராம: கமல பத்ராக்ஷ:" என்றான். அக்கண்ணழகு செய்யுமது என்னென்ன; [ஸர்வஸத்வ மநோஹர:] பிராணிகளென்று பேர்பெற்றாரெல்லாருடையவும் நெஞ்சைக் கொள்ளை கொள்ளுமதாயிற்று அவ்வழகு என்கிறார் திருவடி. இங்கே விமர்சிக்க வேணும்;

